24th August 1961]

*Elumalai Panchayat*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of question No. 1396 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 1396 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா எழுமலை பஞ்சாயத்துக்கு நிர்வாக அதிகாரி நியமிக்காத காரணமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Elumalai Panchayat which was a Class II Panchayat is now known as a village panchayat under the Madras Panchayats Act, 1958, and it is therefore not eligible to have an Executive Officer.

*Suruli waterfalls (rest-house)*

* 1397 *Q.*—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுகா, சுருளி நீர் வீழ்ச்சிக்கு அருகே **Rest-house** கட்ட உத்தேசமுண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI R. SRINIVASA IYER : What is the amount proposed to be spent on the construction of the rest-house and will accommodation for the travellers, who go there in large numbers would be made available? I understand that very large number of people are going there every day. The waterfall is likely to improve at least next to Courtallam waterfalls.

THE HON. SRI C. SUBRAMANIAM : A low-income rest-house at a cost of Rs. 50,000 is going to be built.

SRI N. K. PALANISAMI : இந்த வாட்டர்ஃபால்ஸில் குளித்தால், கூட காய்ச்சலும் வந்துவிடுகிறது என்று சொல்லுவதினால் இதோடு சேர்த்துப் பக்கத்தில் ஒரு ஆஸ்பத்திரியையும் கட்ட அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில பேர்கள் இந்த வாட்டர்ஃபால்ஸில் குளித்துவிட்டால் காய்ச்சல் போய்விடும் என்றும் சொல்லுகிறார்கள். யார் யாருக்கு மனதில் எப்படி தோன்றுகிறதோ அம்மாதிரிதான் எண்ணமும் இருக்கும். கனம் அங்கத்தினர் அவர்களுடைய மனதில் அவ்விதம் தோன்றியிருந்தால் அவர்களுடைய எண்ணமும் அதுவாய் இருக்கலாம்.

*Pension to Educational Officers*

* 1398 *Q.*—SRI K. VINAYAKAM (on behalf of SRI A. VEDARATHNAM) : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஜில்லா போர்டு கல்வி அதிகாரிகளுக்கு பென்ஷன் வசதி எந்தத் தேதி முதல் அமுலுக்கு வருகிறது ?